# சிதம்பரம் சீர்வளர்சீர்
# காசிவாசி சுவாமிகள்
# குருபூஜை மலர்



பார்த்திப வருடம்
2006

உ

சிவமயம்

# சிதம்பரம்
# சீர்வளர்சீர் காசிவாசி சுவாமிகள்
# குருபூசை மலர்








பார்த்திப ஆண்டு

**2006**

உ

சிவமயம்

# வம்சாவளி

அமுத்துக்கருப்பன் செட்டியார்
+
பொற்கொடியாள் ஆச்சி

கறுப்பன் செட்டியார்
வாரிசு
அமுக குடும்பத்தினர்

அழகப்ப செட்டியார்
+
வள்ளியம்மை ஆச்சி

சிவகாமி ஆச்சி
+
கதேக.அழகப்ப செட்டியார்

**சிதம்பரம் செட்டியார்**
**(காசிவாசி சுவாமிகள்)**
+
இலக்குமி ஆச்சி

சொக்கலிங்கம் செட்டியார்
+
(4 மனைவியர்)
1 தெய்வானை ஆச்சி
2 வள்ளியம்மை ஆச்சி
3 தெய்வானை ஆச்சி
4 கல்யாணி ஆச்சி

உமையாள் ஆச்சி
+
ராய.சிதம்பரம் செட்டியார்

சிதம்பரம் செட்டியார்
+
வள்ளியம்மை ஆச்சி

இலக்குமி ஆச்சி
+
நா முரு அரு முருகப்பச் செட்டியார்

அருணாசலம்
+
மீனாட்சி

தேவராயன் செட்டியார்
+
(2 மனைவியர்)
1 மெய்யம்மை ஆச்சி என்ற சிகப்பி ஆச்சி
2 மீனாட்சி ஆச்சி

சொக்கலிங்கம்
+
மீனாட்சி

சிதம்பரம்
+
செலலம்மை

கருப்பஞ்செட்டி
+
மீனாட்சி

முத்துக்கறுப்பி என்ற சிகப்பி
+
இலக்குவன் செட்டியார்

முத்துக்குமரன்
+
சோலச்சி

தேவராயன்
+
இலக்குமி

# பதிப்புரை

சிற்சபை நடுவே திருநடம் புரியும் அற்புதத் தெய்வமாம் ஆடலரசரின் திருவருளால், தில்லையம்பதியில் சீர்வளர்சீர் பொன்னம்பல சுவாமிகள் திருமடம் ஒன்று ஏற்படுத்தி, அதன் மடாதிபதியாக இருந்து, சாதுக்களுக்கு வேதாந்தப் பாடங்கள் பயில்வித்தும், பல வேதாந்த நூல்களுக்கு உரை நூல்கள் அளித்தும் சிவத்தொண்டு செய்து வந்தார்கள். அவர்கள் காலத்திற்குப் பிறகு அத்திரு மடத்தில் ஞானாசிரியராக இரண்டாவது பட்டத்தில் சீர்வளர்சீர் 'காசிவாசி' சிதம்பர ஞான தேசிக சுவாமிகள் எழுந்தருளியிருந்து அம் மடத்தைத் தேசுற விளங்கச் செய்தார்கள். சீர்வளர் சீர் காசிவாசி சுவாமிகள் என் பாட்டனார் ஆவார்கள்.

சீர்வளர் சீர் காசிவாசி சுவாமிகளின் அறுபதாவது ஆண்டு குருபூசையின் நினைவாக சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றை 'அறுபதாவது குருபூசை மலர்' என்று நூலாக 1985 ஆம் ஆண்டு என் தந்தையார் வெளியிட்டார்கள். அதன் மறுபதிப்பாக இந்நூல் வெளிவருகிறது. முதல் பதிப்பில் சில செய்திகள் விடுபட்டுப் போயிருந்தன.

அவை வருமாறு:

1. சீர்வளர்சீர் பொன்னம்பல சுவாமிகள் 'காசிவாசி' என்ற தீட்சா நாமத்தைச் சீர்வளர் சீர் சிதம்பர ஞானதேசிக சுவாமிகளுக்கு இட்டார்கள்.

2. சீர்வளர் சீர் பொன்னம்பல சுவாமிகள் தன் குருநாதர் சீர்வளர் சீர் சிதம்பரஞானதேசிகர் என்னும் கருணாநிதி சுவாமிகள் பெயரால் 'கோவிலூர் சிதம்பர சுவாமிகள் மடம்' என்பதன் சுருக்கமாக "கோ.சித. மடம்" என்று மடத்திற்குப் பெயரிட்டார்கள்.

3. மடாலயப் பிரவேச நாளன்று கோவிலூர் ஆதீனகர்த்தராக இருந்த சீர்வளர் சீர் இராமசாமி ஞான தேசிக சுவாமிகள் சீர்வளர் சீர் காசிவாசி சுவாமிகளுக்குப் 'பஞ்சதசி' எனும் நூலினைப் பாடம் சொல்வித்தனர்.

இந்நூலுக்கு ஆசியுரையைக் கவிதை வடிவில் நல்கிய கோவிலூர் ஆதீனத்தின் மகாசந்நிதானம் சீர்வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகளுக்கு என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நூலை நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த **'பூரணி பதிப்பகம்'** உரிமையாளர் திரு. மேனா மெய்யப்பன் அவர்களுக்கு என் இதயங்கனிந்த நன்றி.

அன்புடன்,

அள.சிதம்.சொ.சொ.
சொக்கலிங்கம்.

காரைக்குடி
22-08-2005

உ

சிவமயம்

கோவிலூர் மடாலயம்
கோவிலூர் - 630 307
( வழி - மானகிரி )
சிவகங்கை மாவட்டம்



☎ 236846

நாள்: 13-08-2005

கலைமதியும் கங்கையொடு கொன்றைத் தாரும்
கலந்தணிந்தோன் காலடியில் பணிந்தோர்க் கெல்லாம்
நலமருளும் உமைபங்கன் நாளும் காசி
நகரிருந்து நமக்கருள்வான் நந்தி நாதன்
மலமறுத்து வீடருளும் மாண்பு சான்றோன்
மலரடியை மறவாதான் தில்லை மன்றுள்
நிலையாக ஆடுகின்ற கூத்தன் பாதம்
நிதம் போற்றிப் பணிவதுவே தொண்டாக் கொண்டோன்

கீதைக்குப் பெருவிளக்கம் சொன்ன ஞானி
கிளர்பெரிய வேதாந்த வேங்கை ஆகிப்
போதமெலாம் அடியவர்க்குப் போற்றிச் சொன்ன
புகழ்பொன்னம் பலசாமி பொலிவார் சீடன்
மேதையெனத் தான்விளங்கிச் சிதம்ப ரத்தின்
மேலான திருமடத்தின் இரண்டாம் பட்டம்
மேதினியில் தானேற்றுச் சிறந்தோன் நல்ல
சிதம்பரப்பேர் கொண்டதொரு காசிவாசி

வரலாற்றை வரைந்தளித்தோன் தேவ ராசன்
வழிவந்தோர் மறுபடியும் பயின்று ஞான
உரம்பெறவே அச்சிட்டார் அவரைப் போற்றி
உவப்புடனே குருபூசை நாளில் தந்தார்
பரவுபுகழ் படைத்திட்ட காசி வாசி
பாதமலர் மறவாதார் நீடு வாழ்க
விரவுபுகழ்க் கோவிலூர் மரபு வாழ்க
வேதாந்தத் திறம்பெருகி வெற்றி கொள்க

***சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகர்***
***கோவிலூர் ஆதீனம்***

உ

சிவமயம்

# முன்னுரை

சிதம்பரம் ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் மடத்தில் இரண்டாவது பட்டத்தில் ஞானாசிரியராக எழுந்தருளியிருந்த என் பாட்டனார் ஸ்ரீ காசிவாசி சிதம்பர ஞானதேசிக சுவாமிகள் சென்ற ரக்தாட்சி ஆண்டு தை மாதம் 24-ம் தேதி விதேகமுக்தி அடைந்தார்கள். அவர்களின் அறுபதாவது குருபூசை இந்த ஆண்டு தை மாதம் 20-ம் தேதி நடைபெற இருக்கிறது. அதன் நினைவாக இந்நூல் மலர்கிறது.

ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகளின் பேரில் கோவிலூர் மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ இராமனாத ஞானதேசிக சுவாமிகள் பாடியருளிய கவிதாஞ்சலி இந்நூலை அலங்கரிக்கிறது. மகா சந்நிதானம் அவர்களுக்கு என் நன்றி கலந்த வணக்கங்கள்.

மற்றும் இந்நூலில் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகளின் வாழ்க்கை வரலாறும் அவர்கள் பேரிலும் ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகளின் மடாலயத்தில் உள்ள மூர்த்திகளின் பேரிலும் நான் இயற்றிய துதிப்பாடல்களும், என் பெயரன் சொ.முத்துக்குமரன் முதன் முதலாக எழுதிய துதிப் பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

என் பாட்டனார் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் விதேகமுக்தி அடைந்த விபரமும் மோட்சதீப விழா பற்றிய விபரமும் என் தமையனார் சிதம்பரம் செட்டியார் அவர்கள் குறித்து வைத்திருந்தார்கள். மேற்படி குறிப்பு இந்நூல் எழுத உதவியாக இருந்தது. ஸ்ரீமத் சுவாமிகள் பரிபூரணமுற்ற பொழுது எங்கள் குடும்பத்தின் சார்பில் என் தமையனார் அள.சித.சொ.சிதம்பரம் செட்டியார் அவர்கள் ஸ்ரீமத் சுவாமிகளின் சமாதிக் கிரியைகளையும் மோட்சதீப விழாவையும் சிறப்பாக நடத்தியிருக்கிறார்கள்.

ஸ்ரீமத் சுவாமிகளின் அறுபதாவது குருபூசை விழாவில் இறைவன் அருளால் இந்த மலரை வெளியிடும் பேறு எனக்குக் கிடைத்திருக்கிறது. அப்பேற்றினை அருளிய அம்மையப்பன் சிவகாமி அம்மை உடனாய சிதம்பரேசர் திருவடிகளை மனம், மெய், மொழிகளால் வணங்குகிறேன்.

**சொ.தேவராஜன்.**

5, ரதவீதி.
காரைக்குடி
10-1-85

உ

சிவமயம்

## ஸ்ரீலஸ்ரீ கோவிலூர் மகாசந்நிதானம்
## இராமநாத ஞானதேசிக சுவாமிகள்
## அருளிய கவிதாஞ்சலி

பொன்னம் பலத்திற் புலிமுனியும்
போற்றிப் பதஞ்சலி யுங்காண
இன்னும் நடிக்கும் நடராஜன்
இருதாள் போற்றி யுள்ளத்தில்
மன்னும் அடியார் மறுபிறவி
மருவா வண்ணம் மடம்கட்டி
பின்னும் பொன்னம் பலஞான
பேசு பெரியோ னிருந்திட்டான்

கற்றோர் கற்றோர் தமையே
காமுறுவார் என்னுங் கணத்ததுபோல்
மற்றோர் மற்றும் அறியாத
மாசி லாத மனங்கொண்டோன்
பெற்றோர் மகிழத் தவஞ்செய்த
பேசு காசி வாசிஎனும்
மற்றோர் மணார் களின்மிக்க
மதிசால் மணார் சிதம்பரனார்




தனக்குப் பின்னர் குருபீடம்
தழைத்து ஓங்கத் தானெண்ணி
கணக்கிற் கிரண்டாம் குருபீடக்
குருவா யிருக்க செய்தனனே
தனக்குச் செவிலி த்தாய்என்று
தான்பேர் வைத்த நாரணும்
மனக்குச் சான்றாய் நீலகண்ட
மானார் புகழ போற்றிடுவாம்

**அரு.ராமனாத ஞானதேசிகர்,**
ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் மடம்,
49, 50, மன்னார்குடி ரோட்டுத் தெரு,
சிதம்பரம். S.R. தெ.ஆ. மாவட்டம்.

உ

சிவமயம்

## ஸ்ரீ காசிவாசி
## சிதம்பர சுவாமிகள் வணக்கம்

பொங்குபுனல் கங்கையும் திங்களொடு கொன்றையம்
போதுமணி வேணி யரனார்
பொற்பாத மலரிணையை எப்போது மறவாது
பூசித்து, முத்தி தருசீர்
தங்கும்எழில் காசித் தலத்தினில் பல்லாண்டு
தங்கியே காசி வாசி
சாமியெனப் பார்போற்ற ஞானநூல் பலகற்றுத்
தன்னைவந் தெய்தும் அடியார்க்
கிங்கிதமொ டுபதேசம் செய்துதிருத் தில்லையில்
இலங்குபொன் னம்ப லப்பேர்
இறைமடம் செழித்தோங்க அதிபனாய்ப் பணியாற்றி
எழில்நந்தி வடிவ மாகி
எங்கள்குலம் பீடுறச் சந்ததம்நல் வாழ்வுபெற
இன்னருள் புரியும் நாதன்
எந்தைக்குத் தந்தையாய் வந்தசிதம் பரதேவன்
இணையடிகள் போற்றி வாழ்வாம்.



உ

சிவமயம்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

# சிதம்பர ஞானதேசிக சுவாமிகள் வாழ்க்கை வரலாறு.

" *செல்வ நெடுமாடம் சென்று சேணோங்கி*
*செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற*
*செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய*
*செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே* "

– சம்பந்தர்

அத்தகைய அருட் செல்வத்தைக் குறைவறப் பெற்றுப் பேரானந்தம் உற்றவர்கள், சிதம்பரம் ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் திருமடத்தில் ஞானாசிரியராக இரண்டாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த, ஸ்ரீ காசிவாசி சிதம்பர ஞானதேசிக சுவாமிகள் ஆவர். அவர்கள் காசித் திருத்தலத்தில் பல ஆண்டு காலம் வாசம் புரிந்து வந்திருந்தமையால் காசிவாசி சுவாமிகள் என்ற சிறப்புப் பெயரால் எல்லோராலும் அன்புடன் அழைக்கப் பெற்றார்கள்.

அவர்கள் இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூருக்கு அருகில் உள்ள கண்டவிராயன்பட்டி என்னும் சிற்றூரில் இளையாற்றங்குடிக் கோவில் கழனிவாசற்குடிப் பிரிவைச் சேர்ந்த ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்தார்கள். அவர்களின் பிள்ளைத் திருநாமம் சின்னான் செட்டி என்பதாகும். காரைக்குடி அ.மு.அழகப்பச் செட்டியார் - வள்ளியம்மை ஆச்சி என்ற தம்பதியர்க்கு, சிவகாமி ஆச்சி, உமையாள் ஆச்சி என்ற இரண்டு பெண்கள் மட்டும் பிறந்திருந்தனர். ஆண் வாரிசு இல்லை. அதனால் அவர்களுக்குச் சுவீகாரமாக, சின்னான் செட்டியார் அவர்களைப் பிள்ளை கூட்டி சிதம்பரம் என்று பெயரிட்டு இராயப்ப செட்டியார் வீட்டில் பிறந்த இலக்குமி ஆச்சி என்னும் சிட்டாள் ஆச்சியை மணம் புரிந்து வைத்தனர். அவர்களுக்குச் சில பிள்ளைகள் பிறந்து இறந்து போயின. கடைசியாகப் பிறந்த குழந்தைக்கு சொக்கலிங்கம் என்று பெயர் சூட்டி வளர்த்து வந்தனர்.

சொக்கலிங்கம் பிறந்த சிலமாதம் கழித்துச் சிதம்பரம் செட்டியார் அவர்கள் தொழில் புரியும் பொருட்டு கோலாலம்பூருக்குச் சென்றார்கள். முற்பிறப்பின் வாசனையால் இவர்களுக்குப் பொருள் ஈட்டுவதில் உள்ள நாட்டத்தைவிட அருள் நாட்டமே அதிகமாக இருந்தது. அதனால் தொழிலை உறவினர் ஒருவரிடம் ஒப்படைத்துவிட்டு கோலாலம்பூரிலிருந்து நேரே காசிக்குச் சென்று கங்கையில் நீராடி காசி விஸ்வேசர் சந்நிதியில் காவி உடையை வைத்து எடுத்துத் தரித்துச் சந்நியாசம் பெற்றுக் கொண்டனர். காசியில் பல ஆண்டுகள் தங்கி வேதாந்த சாத்திரங்களைப் பயின்றும் காசி விஸ்வேசரையும், விசாலாட்சி அன்னையையும் நாள்தோறும் வணங்கியும் காலங் கழித்து வந்தனர்.

பிறகு சிவத்தலம் பலவும் சென்று தெரிசிக்கும் வேட்கை எழத் தென்னாடு வந்து சேர்ந்தனர். கோயில் என்ற பெயரையே சிறப்பாகக் கொண்ட தில்லைப்பதியை அடைந்து அல்லும் பகலும் ஆனந்தக் கூத்தாடும் அம்பல நாதனைக் கண்டு, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி வழிபட்டு வந்தனர்.

அப்பொழுது சிதம்பரத் தலத்தில், கோவிலூர் ஆதீன கர்த்தர் கருணாநிதி சுவாமிகள் என்ற ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞானதேசிகரின் பாதசேகரரும் பகவத்கீதை, கைவல்யம் முதலியவைகளுக்கு உரை நூல்கள் தந்தவருமான சிறந்த மெய்ஞ்ஞானி ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள், சாதுக்கள் தங்கி வேதாந்த பாடங்கள் பயிலவும் சிவத்தொண்டு செய்யவும் ஏற்ற வண்ணம் மடம் ஒன்று ஏற்படுத்தியிருந்தார்கள். அந்த மடத்தில் காசிவாசி சுவாமிகளும் தங்கியிருந்து வேதாந்த சிரவணம் செய்தும் தில்லைநாதனை நாள்தொறும் தரிசித்து வழிபாடு செய்தும் வந்தார்கள்.

அவர்கள் அங்கு வந்து தங்கியிருக்கிற விபரம் அறிந்த அவர்கள் மனைவியும் மகனும் சுற்றத்தாரும் வந்து பார்த்து வணங்கி சுவாமிகளிடம் ஆசிபெற்றுச் சென்றனர்.

காசிவாசி சிதம்பர ஞானதேசிக சுவாமிகளின் பெருமையை அறிந்த ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் தன் காலத்திற்குப் பிறகு அந்த மடத்தின் அதிபராக காசிவாசி சுவாமிகள் பொறுப்பேற்று நடத்தி வரவேணும் என்ற தன் விருப்பத்தை வெளியிட்டனர். மடத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்க மனம்

ஒவ்வாது காசிவாசி சுவாமிகள் காசிக்கேத் திரும்பச் சென்று விட்டனர். பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகளும் சாதுக்கள் சிலரைக் காசிக்கு அனுப்பி மடத்தின் நிர்வாகப் பொறுப்பேற்பதால் பல சாதுக்களுக்கு ஞானோபதேசம் செய்யும் வாய்ப்பும் அவர்களைச் சிவத் தொண்டில் ஈடுபடச் செய்யும் பேறும் உண்டாகும் எனப் பலவாறு எடுத்துச் சொல்லி அவர்களைச் சம்மதிக்க வைத்துக் கூட்டி வந்தார்கள். சுமார் 25 ஆண்டு காலம் சுவாமிகளும் காசியில் வாசம் செய்திருக்கிறார்கள.

ஸ்ரீ பொன்ம்பல ஞானதேசிக சுவாமிகளும் குரோதி வருடம் ஐப்பசி மாதம் 22 உ ஞாயிற்றுக்கிழமை சித்திரை நட்சத்திரத்தில் தீபாவளியன்று விதேகமுக்தியடைந்தார்கள். அவர்கள் விருப்பப்படி காசிவாசி சுவாமிகளும் மடாதிபதியாகப் பொறுப்பேற்று ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் சமாதிக் கிரியைகளையும் மோட்சதீப விழாவையும் மகேசுர பூசையுடன் இனிது நடத்தி, வந்திருந்த சாதுக்களுக்கு துகில் அளித்துச் சிறப்பித்தனர். பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகளின் சமாதி ஆலயத்தைக் கல் திருப்பணி செய்து குடமுழுக்காட்டி ஆண்டு தோறும் தீபாவளியன்று குருபூசை நடத்தி சாதுக்களுக்கு ஆடைகளும் கொடுத்து வந்தார்கள். அவ் வழக்கம் இன்றும் நடந்து வருகிறது.

மேற்படி மடத்தை சுவாமிகள் நன்குறச் சமைத்தும் பாட அறை, போசனக்கூடம், சாதுக்கள் வசிக்கும் அறைகள், நந்தவனம், பசுமடம் முதலியன ஏற்படுத்தியும் மடத்திற்குச் சொந்தமாக ஏராளமான நிலபுலன்கள் வாங்கியும் வைத்தார்கள். அதற்குச் செட்டி நாட்டிலிருந்தும் மலேயா, பர்மா போன்ற தூர தேசங்களிலிருந்தும், நகரத்தார்கள் பணம் கொடுத்து உதவினார்கள்.

அக்காலத்தில் பல சாதுக்கள் அங்கு தங்கி வேதாந்தப்பாடம் கேட்டும், வேதாந்த விசாரம் செய்தும், தமிழ் நூல்களைக் கற்றும் வந்ததுடன் மடாலயப் பணிகளும் புரிந்து வந்தனர். சுவாமிகள் வேதாந்திர சாத்திரங்களை நன்கு போதிப்பார்கள். சிறுவயதிலேயே மடத்திற்கு வந்து படித்து துறவு பூண்ட ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள் என்பார் ஸ்ரீமத் சுவாமிகளின் அபிமானத்திற்குரிய தலை மாணாக்கராகச் சிறந்து விளங்கினார்கள். பரஞ்சோதி ஆசிரமத்தை நன்கு நடத்திவரும் அருணாசல சுவாமிகளும் முத்துக் கிருஷ்ணசாமி,

நீலகண்டசாமி, பண்டித சித.நாராயணசாமி, சொக்கலிங்கசாமி, சிவப்பிரகாச ஐயா, முத்துவேல் ஐயா முதலியோரும் இன்னும் பலரும் சுவாமிகளின் சீடர்கள் ஆவார்கள்.

ஸ்ரீமத் சுவாமிகள் சிதம்பரம் மடாலயப் பொறுப்பேற்ற பொழுது ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர் கோவிலூர் ஆதீன கர்த்தராக இருந்தார்கள். பிறகு ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகரும் அவர்களுக்குப் பிறகு ஸ்ரீ மகாதேவ ஞானதேசிகரும் ஸ்ரீமத் சுவாமிகளின் ஜீவிய காலத்தில் கோவிலூர் ஆதீனகர்த்தர்களாக இருந்தவர்கள். அவர்கள் யாவரும் ஸ்ரீமத் சுவாமிகளிடம் மிக்க மதிப்பு வைத்திருந்தார்கள்.

ஸ்ரீமத் சுவாமிகள் நன்கு படித்தவர்கள், நற்குணங்களும் நற்செயல்களும் நிரம்பியவர்கள். சாந்தமும் பொறுமையும் உடையவர்கள். இன்சொல் அன்றிக் கடுஞ்சொல் கூற அறியாதவர்கள். யாவராலும் போற்றுதற்குரியவர்களாக விளங்கினார்கள். அவர்கள் காலத்தில் சிதம்பரம் மடம் சாதுக்களும் மெய்யன்பர்களும் நிறைந்து செழிப்புடன் திகழ்ந்தது.

ஸ்ரீமத் சுவாமிகள் சுமார் இருபது வருடங்கள் மடாலயத் தலைவராக இருந்து பலருக்கும் ஞானோபதேசம் செய்து பிறந்ததனால் ஆய பயனாகிய வாலறிவன் நற்றாள் தொழுதும் உற்ற பணியைச் செய்து முடித்ததற்பின் ரக்தாட்சி ஆண்டு தை மாதம் 24ம் தேதி வியாழக்கிழமை- நடராஜப் பெருமானுக்குகந்த திருவாதிரை நட்சத்திரத்தில் பூத உடலை உகுத்துப் பரிபூரணம் அடைந்தார்கள். மறுநாள் சுவாமிகளின் பூத உடலைப் பல்லக்கில் வைத்து அடியார்கள் புடைசூழ சிவ நாமாவளிகள் பாடிக் கொண்டு வந்து மடாலயத்தில் சமாதி வைத்தார்கள். ஊர்வலத்தின் போது காசும் சில்லரையும் இறைக்கப்பட்டது. மாசி மீ 3 உ மோக்ஷ தீபத் திருநாள் சிறப்பாக நடைபெற்றது. கோவிலூர் மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிகர் அவர்களும் இரண்டாம் பாட சுப்பராய சுவாமி அவர்களும் சென்னை அனந்தாஸ்ரம், வியாசர்பாடி மடம், திருவாரூர், சிக்கல், திருவண்ணாமலை, திருக்களர் முதலிய கோவிலூர் சம்பத்தப்பட்ட எல்லா மடத்தின் அதிபர்களும், சிதம்பரம் மௌனசாமி மடம், கேணிமடம், தச்சன்குளத்து மடம், முதலிய மடத்ததிபர்களும் நந்தனார் கோவில் சுவாமிகளும் ஏராளமான

சாதுக்களும் கோட்டையூர் க.வீ.சொ.அழகப்ப ஐயா அவர்களும், சுவாமிகளின் குடும்பத்தினர், உற்றார், உறவினர், பங்காளிகள் ஆண், பெண் அனைவரும் மோக்ஷ தீப விழாவிற்கு வந்து கலந்து கொண்டார்கள். ஷெ பத்து நாள் வைபவத்தையும் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகளின் மூத்த பேரன் அள.சித.சொ.சிதம்பரம் செட்டியார் விமரிசையாகச் செய்தார்கள். ஷெ சிதம்பரம் செட்டியார் கதர் அபிமானியாகையால்,இறுதி நாளன்று சாதுக்களுக்கும் மடாதிபதிகளுக்கும் கதராடைகளும், கோவிலூர் ஆதீன கர்த்தருக்கும் இரண்டாம் பாட சுவாமிக்கும் மல்பீசும் கொடுத்து, எல்லோருக்கும் போக்குவரத்துச் செலவும் கொடுக்கப்பட்டது. பத்து நாளும் செட்டி நாட்டிலிருந்து சமையல்காரர்களைக் கூட்டி வந்து உணவு சமைத்து வழங்கப்பட்டது.

ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் மடத்தில் ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் சிவலிங்க வடிவிலும் ஸ்ரீ காசிவாசி சிதம்பர ஞானதேசிக சுவாமிகள் நந்தி வடிவிலும் காட்சி தந்து, வழிபடும் அடியார்களுக்கு இன்னருள் பாலித்து வருகிறார்கள். அவர்கள் அருள் என்றென்றும் நமக்குக் கிடைப்பதாகுக.

*" பொன்னம் பலவன் பொலன்சீர் அடிபரவி*
*பொன்னம் பலமடத்தின் போதகனா - மன்னும்*
*திருநந்தி யான சிதம்பரவேள் பாத*
*அரவிந்தம் எங்கட் கரண்."*

**– சொ.தேவராஜன்.**



# ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள் மடாலயத்தில் உள்ள மூர்த்திகள் துதி

## விநாயகர்

தட்டத் தடபடெனத் தந்தலையில் கையிரண்டால்
குட்டிவந்திப் பார்க்குக் கொடுக்குமே - இட்டமுடன்
மட்டற்ற செல்வமெலாம் மாநிலத்தில் மும்மலத்தின்
கட்டறுக்கும் ஆனை கழல்.

## நடராஜர்

ஈசனே போற்றி என்னை
ஆளுடை இறைவ போற்றி
தேசனே போற்றி தில்லைத்
திருச்சிற்றம் பலவ போற்றி
வாசமார் கமலப் பாதம்
மனத்தினில் வைத்து நாளும்
பூசனை புரிய வைத்த
புண்ணயா போற்றி போற்றி.

## கருணாநிதி சிதம்பர ஞானதேசிகர் திருவடிகள்

திருவளர் கோவி லூரில்
சீரடி யார்கட் கெல்லாம்
அருள்வளர் மெய்ஞ்ஞா னத்தை
அன்புடன் அளித்த வள்ளல்
தெருள்வளர் சிதம்ப ரப்பேர்
ஞானதே சிகனார் ஓங்கு
கருணைமா நிதியின் பாத
கமலங்கள் போற்றி போற்றி.

## பொன்னம்பல சுவாமிகள்

கண்ணனார் உரைத்த கீதை
　　கைவல்யம் முதலாம் நூற்கும்
எண்ணரும் தத்து வங்கள்
　　இயம்பிடும் நூல்களுக்கும்
பண்ணுசீர் உரைகள் பற்பல
　　பகர்ந்தபொன் னம்பலப் பேர்ப்
புண்ணிய மூர்த்தி பாதாம்
　　புயமலர் போற்றி போற்றி.

## காசிவாசி சிதம்பர சுவாமிகள்

மாசில்பொன் னம்பலப் பேர்
　　மாமடம் செழிப்புற்றோங்கித்
தேசுற விளங்கச் செய்த
　　சிதம்பர ஞானி காசி
வாசியாம் நந்திசாமி
　　மலரடி மனதில் வைத்துப்
பூசனை புரிந்து நித்தம்
　　புவியிடை இனிது வாழ்வாம்.

–சொ. தேவராஜன்.

உ

சிவமயம்

## சொ.முத்துக்குமரன் எழுதிய
## *துதிப் பாடல்கள்*

### நடராஜர் துதி

சிதம்பரத்தில் வீற்றிருக்கும் நடராஜா - உனைத்
தேடிவரும் பக்தர்களுக் கருள்ராஜா
பதம்பணியும் பாலன்எனை நடராஜா - கண்
பார்த்தருள வேண்டும்ஐயா நடராஜா.

### காசிவாசி சாமி துதி.

காசி வாசி சாமியே
கருணை கொண்ட சாமியே
மாசி லாப்பொன் னம்பல
மடத்தின் நந்தி சாமியே
ஆசை கொண்ட பேரர்யாம்
அருளை வேண்டி நின்றனம்
அன்பு கொண்ட சிதம்பரப்பேர்
ஐயனே காத்து அருள்கவே.



உ

சிவமயம்

# மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய சிவபுராணம்

## திருச்சிற்றம்பலம்

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளை நீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே - எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவாசகம் என்னும் தேன்.

நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க
ஆகமமாகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க
வேகங்கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழுங் கோன் கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க
ஈசனடி போற்றி எந்தை அடிபோற்றி
தேசனடிபோற்றி சிவன் சேவடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவனடி போற்றி
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன் தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை
முந்தை வினைமுழுதும் ஓயவுரைப்பன்யான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழல் இறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறைந்து எல்லையிலாதானே நின் பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்று அறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல் அசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவு இறுதியில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலோடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை

அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி
புறந்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சேரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்து உள்ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெட
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே
நீராயுருக்கி என் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக்கு அன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வும் இல்லாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றேனே தேற்றத் தெளிவேயென் சிந்தையுள்

ஊற்றான உண்ணாரமுதே உடையானே
வேற்று விகார விடக்கு டம்பினுட் கிடப்ப
ஆற்றேன் எம்மையா அரனே ஓ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே ஓ வென்று
சொல்லற்கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

## திருச்சிற்றம்பலவன் துதி.

எந்தையும் எந்தை தந்தையும் ஞானத்
தந்தையாய் இனிதவர்க் கமைந்த
அந்தமில் சீர்ப்பொன் னம்பல குருவும்
அன்பொடு வடிபட அருள்கூர்
அந்தரத் தலமாம் தில்லையம் பலத்தே
அற்புதத் திருநடம் புரியும்
எந்தையார் நாமம் ஓம்நம சிவாய
என்றினி தியம்புவாம் தொழுவாம்

சொ.தேவராஜன்.



